ஸஞ்சிகை க

ஸ்ரீ:

# கைவல்யநவநீதம்

தாத்பர்யதீபிகா வியாக்கியானஸஹிதம்.

இஃது

தாண்டவர்

அருளிய

மூலமும்

இதற்கு ஸமானார்த்தமாக

சங்குகவி

இயற்றிய ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பும்

கோவிந்தர்

இயற்றிய உரையும் பதிப்பும்.

கும்பகோணம்

சாரதாவிலாஸ அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஆங்கீரஸஹு தைமீ

பிப்ரவரி 1933.






விலை ரூபா 1.] [தபாற்கூலி வேறு.

ஸ்ரீ:

# கைவல்ய நவநீதம்

தாத்பர்யதீபிகா வியாக்கியானஸஹிதம்.

இஃது

தாண்டவர்

அருளிய

மூலமும்

இதற்கு ஸமானார்த்தமாக

சங்குகவி

இயற்றிய ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பும்

கோவிந்தர்

இயற்றிய உரையும் பதிப்பும்.

கும்பகோணம்

சாரதாவிலாஸ அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஆங்கீரஸ ௵ தை ௴

பிப்ரவரி 1933.



விலை ரூபா 1. ] [ தபாற்கூலி வேறு.

## அறிவிப்பு.

# கைவல்யநவநீதம்,

## தாத்பர்யதீபிகா வியாக்கியான ஸஹிதம்.

அத்வைத வித்யாபிமானிகளுக்கு விஜ்ஞாபனம்.

பிரம்மஸ்ரீ பரமசிவேந்த்ராளுக்கு சிஷ்யரும் ஸதாசிவபிரம்மேந்த்ராளுக்கு ஸதீர்த்தருமான கோபாலசாஸ்திரிகள் அவர்களிடத்து வித்யாப்பியாஸம் செய்தும், பிரம்மஸ்ரீ நாராயண குருவிடத்து பிரம்மவித்யா உபதேசம் பெற்றும் விளங்கின.

பிரம்மஸ்ரீ தாண்டவர் என்ற மஹான், அத்வைதவேதாந்தஸித்தாந்தத்தை அங்கை நெல்லிக்கனிபோல் விளக்கும் கைவல்யநவநீதம் என்ற அறிய தத்துவ நூலை தமிழில் உசஙரு பாக்களுள்ளதாக தமிழ் மக்களுய்யுமாறு இயற்றியிருப்பது யாவருமறிந்ததே.

அவ்விருநூற்று தொண்ணூற்று மூன்றுபாக்களின் கருத்தை உள்ளது உள்ளபடி முறையே விளக்கும் சுலோகங்களா சங்குகவி என்ற மஹான், ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு இயற்றியிருக்கின்றனர்.

இவ்விரு நூல்களுள் தமிழிலுள்ள முதனூலானது அச்சியற்றி வெளி வந்திருக்கின்றதாயினும், வடமொழி நூலானது இதுகாறும் எவராலும் அச்சிடப்படாதிருப்பதுபற்றி, இவ்விரண்டையும் சேர்த்து சித்தாந்தத்தை யொட்டின உரையில்லாமலுமிருக்கிறது.

ஆகவே, அக்குறையைப்போக்க, இவ்விரண்டையும் சேர்த்து ஸித்தாந்தாநுஸாரியான தமிழுரையொன்று எழுதி, ஆங்

காங்கு உபநிடதம் பகவற்கீதை, வாஸிஷ்டம், பஞ்ச தசப்பிரகரணம், விவேக சூடாமணி, பிரஸ்தானத்திரய பாஷ்யம், பிரமசூத்திரம், உத்தரகீதை, பாகவதம், ராமாயணம், ஆத்மபோதம், வேதாந்தடிண்டிமம், முதலிய கிரந்தங்களிலிருந்து பிரமாணங்களையும், அப்பிரமாண வாக்கியங்களுக்கு ஆங்காங்கு, தமிழில் அர்த்தங்கள் காட்டியும்.

இன்னம், தத்துவராயர், தாயுமானவர், முதலியோரால் செய்யப்பட்டுள்ள தமிழ் நூல்களிலிருந்தும், பிரமாணங்கள் எடுத்துக்காட்டியும்.

தாத்பர்யதீபிகா என, அவ்வுரைக்குப் பெயர் கொடுத்து வெளியிட ஆரம்பித்திருக்கின்றனம்.

இவ்வுரைசகித இந்நூல், டிம்மி கிரௌன் உ௦-பவுண்டு பேபரில் சுமார் ௧௦௦-பாரங்களில் வெளியாகலாமென எண்ணப்படுவதால், முன்பணம் போட்டு இப்பெரிய காரியத்தை முடிக்கப்போதிய சௌகரியமில்லாதிருப்பதை யொட்டி, மூன்றுமாதத்துக்கு ஒரு ஸஞ்சிகைவீதம், வருஷம் ஒன்றுக்கு நாலு சஞ்சிகையாக மூன்றுவருஷத்தில் வெளியிட எண்ணப்பட்டிருக்கிறது.

இந்த ஸஞ்சிகை ஒவ்வொரு தடவையிலும், டிம்மி உ௦-பவுண்டு கிரௌன் பேபரில் ௧௦-பாரம் அதாவது அ௦-பக்கங்கள் கொண்டதாக, வெளிவரும்.

இதன் வருஷ சந்தா ௪—௦—௦ ரூபாயாகும்.

மேலும், வடமொழியிலுள்ள உ௯௫-மூலசுலோகங்களும் ஸம்ஸ்கிருதத்தில் எடுத்துக் காட்டியுள்ள ௧அ௦௦-பிரமாணங்களும், அவதாரிகை, பதவுரை, முதலியவைகளில் எடுத்துக்காட்டியுள்ள, ஸம்ஸ்கிருத பதங்கள், வாக்கியங்கள், இதுகளும் கிரந்தம், தேவநாகரம், இந்த இரண்டு அக்ஷரங்களில் அச்சிடப்படும்.

மேலும் வியாக்கியானபங்திகளில் சிற்சில இடங்களில் ஸம்ஸ்கிருத பரிபாஷைகள் பொருந்தியுமிருக்கும்.

இவ்வுரையைப்பற்றி, திருநெல்வேலி வீரராகவபுரம் அட்வொகேட் ஸ்ரீமான் R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களும், தேவகிரியில் எழுந்தருளியிருக்கும் பிரம்மஸ்ரீ ராமானந்தஸரஸ்வதி சுவாமிகளவர்களும், சிருகமணி பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளவர்களும், கும்பகோணம் அத்வைதஸபாபண்டிதர் பிரம்மஸ்ரீ யக்ஞஸாமி சாஸ்திரிகளவர்களும், மஹாமஹோபாத்தியாயரும், மதராஸ் மைலாப்பூர் ஸம்ஸ்கிருத காலேஜ் பிருன்ஸிபாலுமான கருங்குளம் பிரும்மஸ்ரீ கிருஷ்ணசாஸ்திரிகளவர்களும், மதராஸ் திருவல்லிக்கேணி ஆர்யமதஸம்வர்த்தனீ பத்திராதிபர் கடலங்குடி பிரம்மஸ்ரீ நடேச சாஸ்திரிகளவர்களும், கொடுத்த அபிப்பிராயத்தை இத்துடன் வெளியிட்டிருக்கிறேன்.

இப்போது, முதல் ஸஞ்சிகை பிருண்டாகி தயாராய் இருக்கிறது. வேண்டியவர்கள் அடியில் கையொப்பமிட்டவரிடத்தில் நேரிலாவது தபால் மூலமாயாவது பெற்றுக்கொள்ளலாம். தபாற் கூலி வேறு.

ஆகவே, அத்வைத வித்யாபிமானிகள் யாவரும் இதில் ஸந்தாதார்களாகச் சேர்ந்து, இவ்வுரை ஸஹித இந்நூலானது சீக்கிரம் வெளிவர உதவவேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்,

பிரும்மஸ்ரீ அனந்தநாராயண குரு சீடரும்,
உரையாசிரியரும் பதிப்பாசிரியருமான,
கோவிந்தர்,
34, மேலமேட்டுத் தெருவு,
கும்பகோணம்.



# கைவல்யநவநீதம்

## முகவுரை.

---

யாவர் ‡ விதித विदित வென்றூலர்த்த தாத்பர்யநிஷ்டர், அவரே யந்நூற்குரை சொலப்புகவேண்டும். அங்ஙனமே, வவ்வுரை நூலாசிரியரது தாத்பர்யத்துக்கு தீபம் போன்றதா, மாதலின்.

§ 𑌤𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌯𑌵𑌿𑌷𑌯𑍇 𑌶𑌬𑍍𑌦𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌣𑌮𑌿𑌤𑌿 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌃 । 𑌶𑍍𑌰𑍋𑌤𑌾 𑌤𑌦𑌨𑍁𑌸𑌾𑌰𑍇𑌣 𑌶𑌾𑌬𑍍𑌦𑌬𑍋𑌧𑍇 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌯𑍇𑌤𑍍 ॥ तात्पर्यविषये शब्दः प्रमाणमिति निश्चितः । श्रोता तदनुसारेण शाब्दबोधे प्रवर्तयेत् ॥ என வசனத்தினின்றும்.

கேவலத்தின் தன்மை கைவல்யம். தன்மை என்றால் ஸ்திதி. அதாவது பா (ஹா) வம்.

கேவலம் = ஸர்வோபாதிவிநிர்முக்தம் பிரம. அதன்பாவம் கைவல்யம், அதாவது ஸ்வப்பிரகாசாத்மரூபகம் பிரத்யகாத்மா. நவநீதம் எனவே, கைவல்யபதத்தை முன்னிட்டுக்கொண்ட அத்தகைய வெண்ணெய். என்பது பெற்றாம்.

கேவலம் = ஸர்வோபாதிவிநிர்முக்தம் நெய். அதன் பாவம் கைவல்யம். எனவே, ஸ்வப்பிரகாசாத்மரூபகம் வெண்ணெய் அதாவது, கைவல்யபதத்தை முன்னிட்டுக்கொண்ட அத்தகைய இருகின நெய் என்பது பெற்றாம். திருஷ்டாந்தவிஷயத்தில போன்று.

ஆகவே, கைவல்ய அமிருத வெண்ணெய் தின்றவர், தின்னார் விடயவிஷமன்னென. எனவே, பிரத்யகானந்தமனுபவித்து

---

‡ அறியப்பட்டிருக்கிற. § சப்தமானது, தாத்பர்யத்துக்கு விஷயம் யாது, அதில் பிராமணம் என நிச்சயிக்கப்பட்டிருக்கிறது, பூர்வீகர்களால், மகான்களால். கேட்டல் செய்கிறவனோ? அங்ஙனம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறதை, அனுஸரிக்கிற வழித்தா, சப்தஞானத்தில் பிரவர்த்திக்க வேணும்.

நித்யதிருப்தியடைந்தவர், விஷயசுகமனுபவித்து பவரோகத்தை யடையார் என்பது.

மேலும், இந்நூலோ, ரஸாயனம் போல் இலகுநடை கொண்டது என்பதும், ஸூத்ரம்போல் பா (ஹா) வ புஷ்களமுள்ளது என்பதும், ஆரியர் எவரு மேற்பர். அதிகாரத்துக்கியை ரஸவத்தான வாக்குகள் அமைந்திருத்தலின்.

ஆகவே, மானுஷவுலகில் முமுக்ஷுக்கள் எவரும் அடைதற்குரியது என.

எங்ஙனம் எனில்.

உத்தமாதிகாரியை நிமித்தீகரித்து, அருமை தோன்ற 'அடைந்தவர் = † ப்ராஜ்ஞாநாமஸ்ருதாம் प्राज्ञानामश्रुतां' எனப் பாயிரம் கூ-லும். மத்திம கனிஷ்டாதிகாரிகளை நிமித்தீகரித்து, பாரந்தநூல் பார்க்கமாட்டாமைந்தருமுணருமாறு' என ரு-லும். பக்வத் பக்திநிஷ்டையை முன்னிட்டுக் கொண்ட, ஸ்வதர்ம நிஷ்டையுடைய புமான்களையும் ஸ்திரீகளையும் நிமித்தீகரித்து பொதுப்பட 'மானிடர்க்கீசன் நன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்து' எனப் பிந்தினபடலம் கூஉ-லும் கூறப்பட்டிருப்பதி னின்று மிந்நூலாசிரியரால்.

எனினும் முமுக்ஷுக்கள், ஸம்ஸ்காரமுகவழித்தா ஆன்றோரை முன்னிட்டு இடையறுது ஓடாது ஆதரித்து, நிஷ்பிரதிபந்தக ஞான மடையவேண்டியவர். எனமேல்.

மேலும், நூலாசிரியாது பூர்வவிருத்தாந்தம், இதுகாறும் வெளிப்படையாக் காணப்படவில்லை. எனினும், அது விஷயமாச் சோதிக்குங்கால், அந்தணர்குலத்து உதித்தவர் எனவும், இல்லறம் கொண்டவர் எனவும், நன்கு விளங்குகின்றது.

எங்ஙனம் எனில்.

தன்னிய ஞானே நானுத் தரீயத்தை வீசுகின்றேன், எனக் கூறியிருத்தலின், பிந்தினபடலம் களரு-ல்.

---

† பிராஜ்ஞர் 'அறியப்பட்டிருக்கிற அறியத்தக்கினதை யுடையவர்'.

எனவே, உத்தரியசப்தம் கூறியுள்ளபடி அந்தணர்குலத்தி உதித்து இல்லறங் கொண்டவரையே குறிப்பியாகிற்கிறது. ஆதலின்

மேலும், வடநூல் வல்லவர் சொல்லும் வாசகப்பொருள் சேராமல் இடராகிற் பொருளாம் வண்ண மிலக்கண முரையாற் கொள்வர். எனவும்.

இடமாக வதுவு மூன்றுச் செய்யுவார் விட்டதென்றும் விட விலாதென்றும் விட்டும் விடாததென் றும்பே ராமே. எனவும், மூந்தினபடலம் ௭௧-லும்.

கங்கையிற் கோஷமென்றுங் கருப்புச்சேப் போடுதென்றுந் தங்கிய சோயங்தேவ தத்தனென் றுஞ்சொல் வார்கள் எனவும்.

இங்குதா ரணங்களாக்கி யிந்தமூன் றுரைகளாலே துங்க நூல் விரோதமான சொல்லெலாம் பொருளாந்தானே. எனவும் ௭௨-லும்.

மனையறங்கள் செய் மகங்கள் செய். என்ப பிந்தினபடலம் ௭௩-லும்.

கன்னுமூனு நீ விரும்பினுன் மகங்கள் செய். என ௭௫-லும்.

மதுவிறைச்சிக ளுண்ணென்ற சுருதி பின்மணந்துபா ரெனல் பாராய். எனவும்.

இதையும் விட்டொழி யதி நைட்டிகவன்னிக் கிழ்ச்சியற்றதும் பாராய் எனவும் ௭௬-லும் கூறியிருத்தலையும் சற்று கவனிப்போம்.

வடநூலும் அதன் வல்லமையும் அந்தணர்க்கே உரியது. ஆகமப்பிரமாணத்திலும் பிரத்யக்ஷப் பிரமாணத்திலும் காணப்படுகையால். மேலும், அனாதியான வேதம் ஈசுவரவாக்ரூபம். ஆகவே, வர்க்குக்கும் பிராமணர்க்கும் ஸ்தானம், ஈசுவர முகம் ஆதலினாலும். ‡ ப்ராஹ்மணோஸ்ய முகமாஸீத் ब्राह्मणोऽस्य मुखमासीत् என சுருதியின்றும்.

---

‡ இவருடைய முகத்தில் நின்றும் பிராமணன் உண்டானான்.

எனவே, வேதத்துக்கும் அந்தணர்க்கும் ஸ்தானம் பேதியா திருத்தலினாலு மென்க.

ஆகவே, கூறியுள்ளபடி, பொருளாம் வண்ணம் இலக்கணே யுரையாற் கொள்வதும், அவ்விலக்கணையைப் பொருத்தமுள்ள ஈாமாவுடன் மூன்முச் செப்புவதும், அம்மூன்றுக்கும் கங்கையிற் கோஷமென்றும், கருப்புச்சேப்போடுதென்றும், தங்கிய சோயங் தேவதத்தனென்றும், முறையே உதாஹரணங்கள் சொல்வதும், அந்தணர்க்கே உரியது. என்பது பெற்ரும்.

எனவே, இத்தகைய நியாயங்களினின்றும், மேற்கண்டபடி ஏக, ஏஉ-ல் கூறியுள்ள இந்த விஷயம், வடநூலுக்கும் அதன் வல்லவராகிய அந்தணர்க்குமே பொருத்தம் எனவும், அத் தகைய நூலையும் அதன் வல்லவரையும் வேறுபடுத்திக் காட்ட வும் நின்றது.

எனினும், கூறியவற்றுள், விட்டதென்றும் விடலிலதென் றும் விட்டும் விடாததென்றும் போமே. என்றதும், இங்கு தாரணங்களாக்கி யிந்த மூன்றுரைகளாலே துங்கநூல் விரோத மான சொல்லெலாம் பொருளாந்தானே, என்றதும். இந்நூ லாசிரியரையே குறிப்பிடுதலின், ஏனையவற்றின் விஷயத்தில் வடநூல் வல்லவர் எனக்கூறியுள்ளது தாம் உள்பட எனவும், வடநூல்வல்லவர் என பிறவினைபோல் தாம் கூறினது வியங்கி யம் (சிலேடை) எனவும், பொருள்படுமாறு காண்க.

மேலும், இதோடு, தென்னூலும் அதன் வல்லமையுங் கூட அந்தணர்க்கு உரியது, எனற்கு இந்நூலே அத்தாக்ஷி என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

தவிர மேலே கண்டபடி, மனையறங்கள் செய். மகங்கள் செய். கள்ளுமூனு நீ விரும்பினன் மகங்கள் செய். மதுவிறைச் சிகளுண்ணென்ற சுருதி பின்மணந்துபாரெனல் பாராய். இதை யும் விட்டொழி யதி நைட்டிகவன்னிக் கிகழ்ச்சியற்றதும் பாராய். எனக் கூறியுள்ளவை. கன்மகாண்ட வாக்கியங்கள். எனவே, வேதியரால் கூறற்கும் அனுஷ்டித்தற்கும் உரியவை. இவற்றுள்,

கள்ளூழுனு நீ விரும்பினுன் மகங்கள் செய். மதுவிறைச்சிகளுண் ணென்ற சுருதி பின் மணந்து பாரெனல் பாராய். எனக்கூறியுள் ளவை. விரும்பத்தகாத பிராமணர்களேயே நிமித்திகரித்தது ஆதலின்.

மேலும், அந்தணர் நூல் என கன்மகாண்டத்தை பிந் தினபடலம் கருகூல். எனவே, அந்தணர் நூல் என்றது. அந் தணரை வேறுபடுத்த நின்றது. ஆதலினுலும்.

தவிர, இந்நூலில் ஸம்ஸ்கிருதசப்தங்கள் அனேகங்கள் ஆங் காங்கு மணிப்பிரவாளம்போல் காணப்படுவதை நிமித்திகரித்தும் இந்நூலாசிரியர் ஆதிவர்ணத்தினர், என விளங்குகின்றது.

இன்னம், பிராமணர் இருவர் ஸம்ஸ்கிருதவித்வான் கள் வெவ்வேறு காலத்தும் இடத்தும், இந்நூல் ஒவ்வொரு கவிக்கும் ஸமானார்த்த ஒவ்வொரு சுலோகமாக ஒருவரும், மற் றொருவர் இந்நூல் உகூஙு-கவியையும் உ௦௪-சுலோகமாகவும், ஸம்ஸ்கிருதபாஷையில் மொழிபெயர்த்து கவனம் செய்திருப்பதி லிருந்தும், இவ்விரு மஹான்களும், இந்நூலாசிரியரை ஸஜாதீயாக அறிந்திருக்கிறார்கள் என்பதும் நன்கு விளங்குகி றது. இவ்விருவரில் முந்தினவர் செய்திருக்கிற ஸமானார்த்த சுலோகங்களே மூலமாகக்கொண்டும், பிந்தினவர் செய்திருக்கிற பிரபோதாமிருதம் என நாமம் ஏற்கப்பெற்ற உ௦௪-சுலோகங் களைப் பிரமாணமாகக் குடுத்தும் தாத்பர்யதீபிகா என்ற இந்த வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிறது.

ஆகவே, இதுமுதற் காரணங்களாலும், நாராயணர் என நாமங்கொண்ட இவருடைய குரு பிராமணராதலாலும், சீடரா கிய இந்நூலாசிரியர் அந்தணர்குலத்து உதித்தவர் என்ப தும், இல்லறத்தினர் என்பதும் நியாயமுகத்தால் ஸ்பஷ்டமாக்கப் பட்டது.

அப்படியானுல் வடநூல் வல்லவராகிய இக்கவி ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றுதது யாது காரணம் என வாசங்கித்து தமிழ் மக்களுய்யுமாறு குரு ஆஜ்ஞை என சமாதானம் சொல்லப் பட்டது.

ஆரணப் பொருளாம் வித்தை யானந்தம் விளங்கவேனுங்
காரணங் குறைவில் லாமற் கைவல்ய நவநீதத்தைப்
பூரண மாக்க வேண்டி பூர்வமா நன்னி லத்தில்
நாரண குரு நமக்கு நவின்றனர் கனவில் வந்தே.
எனப்பிந்தினபடலம் ளஎகூடல் ஆதலின்.

அன்றியும், பிந்தினபடலம் ளஎடு-ல். தன்னியனின்னு நானே தாண்டவமாடுகின்றேன். எனவும், ளஎகூ-ல் சத்தியமத நூலன்றோ தாண்டவா வென்றழைத்தார். எனவும், கூறியிருத்தலினின்றும், தம்மைத் தமது மகிமாவிலேயே பிரதிஷ்டை பண்ணிக்கொண்டவரான நூலாசிரியருக்கு உடன்பாடின்றிய ராய சப்தத்துக்கும் சுவாமி சப்தத்துக்கும் அவசரம் கண்டிலன். ஆகவே தான் பொருத்தமின்றியது என அப்பதங்கள் எடுக்கப் பட்டன. நியாயமுகத்தால் நிரூபிக்கின் அங்கீகரிப்பதில்ஆக்ஷேப மில்லை

மேலும், இந்நூலாசிரியரைப்பற்றி, பின்னர் கர்னபரம்பரையாக, தெரிந்த விபரம் பின்வருமாறு.

பிரம்மஸ்ரீ பரமசிவேந்திராளுக்கு சீடரும் ஸதாசிவபிரம்மேந்திராளுக்கு ஸதீர்த்தருமான கோபால சாஸ்திரிகள் என்பவர், கிரகஸ்ததர்ம்ம் வழுவாது திருவானைக்காவலில் வஸித்துவருங்கால், ஸதாசிவபிரம்மேந்திராள் ஒருசமயம் புதுக்கோட்டை வர, தனக்கு உபதேசம் செய்யவேணுமென்று அவரை ராஜா வருந்திக்கேட்க, இந்த அவதூதசரி உபதேசம் செய்யப் பொருத்தமில்லாதது, ஆதலின், எனது ஸதீர்த்தர் கோபாலசாஸ்திரிகள் திருவானைக்காவலில் கிரகஸ்ததர்மியாய் வஸித்துவருகிறார். அவரிடம் பெற்றுக்கொள்ளலாம் என்று சொல்லிப் போய்விட்டார்.

பின்னர், புதுக்கோட்டை மகாராஜா கோபாலசாஸ்திரிகளை சரண்புகுந்து, புதுக்கோட்டைக்கு வரவேணுமாய் பலதடவை வருந்த, அவ்வேண்டுகோளுக்கு இணங்க, அவருக்குத் தக்க விடுதி முதலிய வேண்டிய சௌகரியங்களால் ராஜா அவரை உபசரித்து வந்தார்.

இங்ஙனம் கொஞ்சகாலம் உபசரித்து, பின்னர் ராஜா தன் அபிப்பிராயத்தை சாஸ்திரிகளிடம் விஜ்ஞாபிக்க, விஜாதீயரும், அதிகாரப் பொருத்தமில்லாதவரும், என்ற எண்ணத்தால் அநேகதடவை மறுத்துப் பின்னர், தமது வாஸஸ்தானமாகிய திருவானைக்காவலுக்குப் புறப்படுவது தெரிந்த ராஜா சாஸ்திரியள் ஊருக்குப் போகாவண்ணம் தனது ஆதிக்கத்தால் செய்தும், உபதேசிக்க வருந்தியும் வேண்ட, தமக்கு இஷ்டமில்லா விஷயத்தில் ராஜாவின் நிர்பந்தத்தால் ஈசுவர இச்சைப்படி நடக்கட்டும் என்று பஞ்சாக்ஷராதி மஹாமந்த்ரங்களை ராஜாவுக்கு உபதேசித்ததின் பலனாக சாஸ்திரிகள் இரண்டு கண்களின் பார்வையிழந்து அந்தகரானார்.

அதையறிந்த ராஜா மனவருத்தமுற்று, சாஸ்திரிகளுக்கு ஒருவாறு திருப்தியுண்டாக அனேக கிராமங்களை இனாமாகக் கொடுக்கப் பெற்ற கோபால சாஸ்திரிகள், தனக்குக்கிடைத்த தீர்த்தவஸதி இல்லாத கிராமங்களில் தடாகங்களையும், ஆலயமில்லாத கிராமங்களில் தேவாலயங்களையும் புதுப்பித்து, ஈசுவர ஆராதனைக்குரிய சௌகரியங்களையும் ஏற்படுத்தி, தனக்கு கிடைத்த கிராமங்களில் கோஷ்பாதபூமி கூட வைத்துக்கொள்ளாமல் மீதியுள்ள எல்லாவற்றையும் ஸத்பிராமணர்களுக்கு இனாமாகக் கொடுத்துவிட்டதின் பலனாக கோபாலசாஸ்திரிகள் முன்போல் இரண்டுகண்களின் பார்வையை ஈசுவரானுக்கிரகத்தினால் அடைந்து விளங்கினார்.

கோபாலசாஸ்திரியள் செய்துள்ள இத்தகைய தர்மங்களும், அவர் புதுக்கோட்டை மகாராஜாவுக்கு குரு என்பதும், இப்போதும் புதுக்கோட்டை ஸமஸ்தானத்தில் விளங்குகின்றது.

பின்னர், கோபாலசாஸ்திரிகள் மகாராஜாவிடம் அனுமதி பெற்றி தமது வாஸஸ்தானமாகிய திருவானைக்காவலுக்கு வந்து, முன்போல் கிரகஸ்ததர்மம் வழுவாது வஸித்துவந்தார்.

இங்ஙனமிருக்க, மதுவனமெனப் பெயரியைந்த நன்னிலமென்னும் பதியில் பூசுர மரபில் தோன்றிய ஒரு தாண்டவர் என்ற மஹான் ஷை கோபாலசாஸ்திரிகளை அடைந்து, அவ

ரிடத்தில் வித்யாப்பியாஸம் செய்தும், ஸ்வஸ்தலமாகிய நன்னி லத்து, பிரம்மவித் சிரேஷ்டராய் விளங்கிக்கொண்டிருந்த பிரம்மஸ்ரீ நாராயண குருவிடத்து பிரம்மவித்யா உபதேசம் பெற்றும் பிரம்மவித்தாய் விளங்கினர்.

இம்மஹான் தமது குருவின் ஆஜ்ஞையை கடைபிடித்து தமிழ்மக்களுய்யுமாறு கைவல்ய நவநீதம் என்ற இவ்வறிய தத்துவ நூலை தென்மொழியில் இயற்றினர் என.

மேலும்,

திருவளர் தெய்வச் செழுமுறை முடியின்
பொருளதைச் சூத்திரம் புகன்றனன் மேனாட்
டயாவுடை வல்லபத் தனி முனி வரனும்
வியாதனுங் கதற்கு விரித்தனர் பாடியம்
பற்பல ரவையெலாம் பக்க பாதச்
சோற்பயில் வனவே தூயவவ் வியாதன்
பொங்கர வணிந்த புராந்தகன் கலையே
சங்கர நாமந் தயங்கவோர் பாற்கர
னென்னத் தோன்றி யெனது சூத்திரத்துக்
குன்னத மெய்ப்பொரு ளுரைத்து மற்றும்பல
அற்புத நடத்தி யவிர்தரு மெனவே
பொற்புறு மற்புத புராண மதனில்
முந்துரைத் திடுமெருண் மொழிப்படி கலியுள்
வந்தவ தரித்து வதரிநன் னகு
மூர்த்தியைத் தேவ முழங்குநீர் நதியினின்
றூர்த்தெடுத் தத்தலத் தமர்தரத் தாபனஞ்
செய்துபுன் சமண்முதற் செறிபல மதத்தையு
மைதுவென் றோங்கு மரியசீர்ச் சங்கர
பகவற் பாதர்செய் பாடிய மதுவே
தகவிற் பொதுமையாத் தழைத்துமன் னியதால்
அன்னபா டியவழி யறிஞர்பற் பலரும்
சொன்னநூல் தமக்கோ தொகையிலை யவையெலாம்
தெள்ளிதி னுய்ந்துணர் சிந்தையன் றெய்வதக்
கள்ளிவர் தருமதுக் காடெனப் பெயரிய

திருநன் னிலத்தொளி திகழ்தகு மரபி    ல்
வருமொரு தாண்டவ ராயநா மத்தோ    ன்
நாராய ணப்பெயர் நயந்ததன் னாசா    ன்
சாராத் தனதுயர் சமாதியோகத்தி    டை
அன்பநீ யொருவே தாந்தநூ லறைகு    தி
யென்பதா வருளிய வின்னுரை கடைபிடி    த்
தாய்ந்தபன் னூற்பொரு ளனைத்தையுந் திரட்டி நீ    ர்
வாய்ந்த கை வல்லிய மாநவ நீதமா    ம்
பெயரிற் புகன்றனன் பேசுமந் நூற்    கோ
அயர்வுறு முரைபல ரறைந்துள    ர்

என்றார் சிவசிதம்பரர். பொன்னம்பலர் இயற்றிய தத்துவார்த்ததீப உரையில்.

இங்ஙனம் கூறியுள்ளவற்றுள், 'திருவளர் தெய்வச் செழுமறை முடியின்' என்றதுமுதல் 'அன்னபா டியவழி யறிஞர்பற்பலரும். சொன்னநூல் தமக்கோ தொகையிலை' என்றதுவரை கூறியுள்ளவைகளும், நாராய ணப்பெயர் நயந்ததன் னாசான் எனக் கூறியுள்ளதும், அந்தணர்குல மஹான்களையே குறிப்பிடுகின்றன. பிரவஸித்தர்களாதலின்.

ஆனால் தாண்டவ நாமம் பூண்ட இந்நூலாசிரியரைப் பற்றியோ வெனில்; 'அவையெலாம். தெள்ளிதி னாய்ந்துணர் சிந்தையன். எனவும், ஒளி திகழ்தகு மரபில். வருமொரு, எனவும் விசேஷணம் கொடுத்துக் கூறியிருத்தலினின்றும் சற்று கவனிப்போம்.

அறிஞர் என்றது கூறியபடி அந்தணரையே குறிப்பிடுதலின் அன்னபா டியவழி என்றதும், சொன்ன நூல் தமக்கோ தொகையிலை என்றதும், வடமொழிரசனையையே காண்பிக்கின்றன.

ஆகவே. அவையெலாம் = அத்தகைய வடமொழி நூலனைத்தையும். தெள்ளி தின் ஆய்ந்து = தெளியுமாறு சோதித்து. உணர் சிந்தையன் = யாது ஸாரபூதம் அதனைக்கண்டு அறிகிற சிந்தனம் உள்ளவன். என்ற விசேஷணமனைத்தும், அந்தணர் செய்கையையே காண்பிக்கின்றன.

† [illegible] **श्रद्धयान्विता-गमार्थेषु ब्राह्मं कर्म** என பாஷ்யகார ஸம்மதிவசனத்தினுல்.

மதுக் காடெனப் பெயரிய. திருநன்னிலத்து என்றது. மதுவனம் என நாமம் இயைந்த மங்களகர நன்னிலம் என்னும் தலத்தைக் குறிக்கிறது. அத்தலத்து, ஒளிதிகழ்=பிரகாசம் விளங்காநின்ற. தகு=ஸம்மதமான. மரபில்=வம்சத்தில். வரும்=ஆவிர்பவ. ஒரு=ஒப்பற்ற. என்ற விசேஷணங்களனைத்தும், அந்தணரையே குறிப்பிடுகின்றன.

அனைத்தும் விசேஷணம் மனதுக்கு சம்பந்தமின்றி தேக சம்பந்தமாயிருத்தலின். மரபில் எனக் கூறியிருத்தலினின்றும்.

மேலும் **அன்ப நீ** என இந்நூலாசிரியரை நிமித்தீகரித்து ஆசானுகிய நாராயணரின் விளிவெற்றுமையினின்றும் இருவரும் ஸஜாதீயினர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

நாராயணர் அந்தணர் என்பதை அருணசலர் உரைகொண்ட இந்நூலின் உரை சிறப்புப்பாயிரத்தில் காணலாம்.

அன்றியும், நூலர்த்த தாத்பர்யநிஷ்டரால் செய்யப்பட்டிருக்கிற உரையே, நூலாசிரியரது தாத்பர்யத்துக்கு தீபம் போன்றது. என இம்முகவுரையின் ஆதியில் கூறப்பட்டிருப்பதினின்றும், நூலாசிரியரது பூர்வவிருத்தாந்தமும் அறிவிக்கவேண்டுமாதலின், பெரியோர்களால் நியமனம் செய்யப்பட்டதிலிருந்து கூறியுள்ள நியாயங்களினின்றும் இந்நூலாசிரியர் அந்தணர்குலத்தினர் என்பதும் இல்லறங் கொண்டவர் என்பதும், இங்கு ஸ்பஷ்டமாக்கப்பட்டது. இதுகாறும் வெளிப்படையாகாததினின்றும்.

மேலும் ஈசுவர அனுக்கிரகத்தினுல், பூர்வஜனிஸஞ்சித ஸம்ஸ்காரபலத்தினுல், தன் மனது எந்த மூர்த்தத்தில் ரமித்துக்கொண்டிருந்ததோ, அத்தகைய தாரகநாமனை, ஸம்ஸாரபய த்ராதாவை, தர்மாத்மாவை, ஸர்வலோகசரண்யனை, ஸீதாபிராமனை, உபாஸனு பரிபக்குவதிசையில் பரமேசுவர அவதாரரூபகுருமூர்த்தமாக் காட்சி தந்து ஆட்கொண்டவனை வணங்கி, அவரனுமதிபெற்ற, திராவிடபாஷையிலும் ஸம்ஸ்கிருதபாஷையிலும் கொஞ்

---

† வேத அர்த்தங்களில் சிரத்தையானது பிராமணருக்கு உரிய கர்மம்.

சமேனும் பாண்டித்யமில்லாத இவ்வியாக்கியர்தர் (இவ்வு ரையாசிரியர்)

*பிரம்மஸ்ரீ தாண்டவர் இயற்றியதும், இத்தமிழ்நாடெங் கும் விசேஷ பிரஸித்திபெற்றிருப்பதுமான,* **கைவல்ய நவநீ தம்.** என்னும் இவ்வறிய தத்துவநூலை, தெளியுமாறு ஆய்ந்ததி னின்றும், சோதித ஒவ்வொரு பிரக்கிரியைப் பொருளும், முடிவு பொருளும், ஏற்கனவே அப்பியாஸ வைராக்கியத்தினின்றும் உதய அனுபவத்துக்கு ஒத்திருப்பதையறிந்து, மனஸ்ஸமாதான மும், ஆறுதலும், அடைந்தான்.

இங்ஙனமிருக்க. உ௯-(வது) த்தின்போது, பிராரத்தவசத்தி னல் இல்லறம் ஒழிந்துவிடவே, ௭-வயதுக்குட்பட்ட மூன்று குழந்தைகளை, ஸாதனமில்லாதகாரணத்தால் ரக்ஷணை நிமித்தம், அவர்களுடைய மாதுலர்வசம் விட்டு, தான் தேசிகரிடம் அனும திபெற்று, குருமார்க்கத்தினின்று நழுவாமல், வைராக்கியசீல னய், ஈசுவரனிடத்தில் ஏகாந்தபக்தியுள்ளவனய், கிராமேகராத் ரமா, தேசாடனம் செய்யலுற்றான்.

*வருஷக்கணக்கா மாதக்கணக்கா நாள்கணக்கா இரவு போ ஜனமில்லாமலும், சிற்சில நாள் பகல் போஜனமில்லாமலும் சஞ் சரித்தான்.*

இத்தகைய் காலத்தில், இவனுக்கு ஏதோ கார்ணத்தால் திடீரென்று ஒரு எண்ணம் உண்டாயிற்று. பற்பல நூற்பொரு ளினைத்தையும் திரட்டி, **கைவல்ய நவநீதம்** என பெயரில் ஏற் பட்டுள்ள இஞ்ஞானசாஸ்திரத்துக்கு, ஸம்ஸ்கிருதபாஷையில் சுலோகரூபமாக ஏதாவது கிரந்தம் கிடைக்குமா, என்பதுதான். இத்தகைய எண்ணத்தை பரமேசுவரனிடத்தில் அடிக்கடி அர்ப் பணம் செய்தும், அவரனுக்கிரகத்தை எதிர்பார்த்தும் சஞ்சரித் தான். ஈசுவரானுக்கிரகத்தினல் மதுரை ஜில்லா வத்தல்குண்டு அக்கிரகாரத்தில் ஒரு ஸத்பிராம்மணரிடத்தில் ஏட்டுப்பிரதியில் இந்நூல் உ௯௩-கவிக்கும் ஸமானர்த்தமாக ஸம்ஸ்கிருதபாஷை யில் முறையே உ௯௩-சுலோகம் இருக்க, அதற்கு வேறு பிரதி எழுதிக்கொண்டான்.

பின்னர் நூலாசிரியர்களுடைய பூர்வவிருத்தாந்தம் தெரி யாத காரணத்தால் இவ்விருநூலையும் சோதித்தும், மூலம் இது

எனவும், மொழிபெயர்ப்பு இது எனவும் தெரியாது. அதே எண்ணத்தோடு சஞ்சரித்தான். சீர்காழி தாலூகாவில் ஏதோவொரு கிராமத்தில் ஒரு பிராமணரிடத்தில் ஏட்டுப்பிரதியில் இந்நூல் உகூரு-கவிக்கும் முறையே ஸமானார்த்தமாக பிரபோதாமிருதம் என நாமம் ஏற்கப்பெற்ற உ0ச-சுலோகம் கொண்ட ஸம்ஸ்கிருத நூல் இருக்க, அதற்கும் வேறு பிரதி எழுதிக்கொண்டான்.

இம்மூன்று நூலையும் சோதிக்குங்கால், தமிழ்நூல் தான் மூலம் எனவும், ஏனைய ஸம்ஸ்கிருத நூல் இரண்டும் மொழிபெயர்ப்பு எனவும் தெரிந்து, தன் புத்திக்கு எட்டினவரை தமிழ்நூலுக்கு ஒரு உரை எழுதவேணுமென்று தீர்மானித்து, குரு அனுக்கிரகத்தையும் அனுமதியையும் பெற்று, சென்ற பரீதாபிவருஷம் சித்திரைமாதத்தில் ஆரம்பித்து, அதற்கு வேண்டிய எல்லா சாதனங்களையும் சிரோபூஷணமாகக் கொண்டு. முன்போல் சஞ்சாரயுக்தனாய் உ0-வருஷம் எழுதி, அவ்வுரைக்கு தாத்பர்யதீபிகா எனப் பெயர் கொடுத்து, சென்ற பிரஜோத்பத்தி வருஷம் தைமாதத்தில் முடித்தான். சஞ்சாரத்தில் ஏற்பட்டுள்ள அனேகவித கஷ்டங்களும், அசௌகரியங்களும், இவனுடைய திருஷ்டிக்கு ஸுககர்மாகவே காணப்பட்டன. அனுபவிக்கவும் பட்டன.

முன்னர், அன்னத்தை சிருஷ்டித்து, பின்னர், தோற்றங்களை சிருஷ்டித்த ஈசுவரன், முன்னர் கூறியுள்ளபடி யாதொருபாஷையிலும் பாண்டித்யமில்லாத தன்னை, ஒரே உறுதியுடன் இருந்து எழுதிமுடிக்கும்படி செய்வித்ததினின்றும், இவ்வுரையை ஸப்பிரயோஜனமாக செய்தற்கு, அதிகாரிகளையும் ஏற்படுத்தியே இருக்கிறார் என்பது இவனுடைய முடிவான தீர்மானம். ஈசுவர அனுக்கிரகத்தினாலும், குருவனுக்கிரகத்தினாலும், எங்தெந்த விடத்தில் எப்படி எப்படி ஸ்புரிக்கிறதோ, அந்தந்தவிடத்தில் அப்படி அப்படி எழுதியிருக்கிறான். பின்னையோ, பாண்டித்தியத்தினால் எழுதினதன்று.

இவ்வுரையில் ஏற்பட்டுள்ள தமிழ் நடையும், ஸம்ஸ்கிருத பரிபாஷாநடையும், அததற்குறிய முறைப்படி இராது எனவும், மாறுபட்டிருக்கிறது எனவும், அப்படியிருப்பது உப்பில்லாக்கூழ் போல் பசையின்றியது எனவும், இவன் மனப்பூர்வமாய் ஒத்துக் கொள்கிறான்.

அப்படியிருந்தபோதினும் க்ஷுதாதுராணாம் நருசிர் நபக்வம் क्षुधातुराणां न रुचि र्न पक्वं அதாவது, அதிக பசியுள்ளவர்கள் இந்திரியதிருப்தியை அறியாது உணவின் (ரஸாரஸத்தையும், பக்வாபக்வத்தையும் அறியாது) க்ஷுன்னிவிருத்தியைமாத்திரம் அறிவதுபோல, கலைவல்லோர் அனைவரும் இவ்வுரையின்கண் உள்ள குற்றம் குறைகளை அறியாது குணத்தை அறியவேண்டுமென்று இவன் பிரார்த்திக்கிறான்.

மேலும், இவனுடைய இஷ்டமித்திரர்களும் மற்றும் சிலரும், இவ்வுரைஸகிதமாய் இந்நூலை வெளிப்படையாக்கவேணுமென்று நியமித்ததினின்றும், அவர்கள் இஷ்டத்தைப் பூர்த்திசெய்ய தற்காலம் வெளிப்படையாக்கற்குறிய பிரயத்னவானுயிருக்கிறான் என, வியங்கியப்பொருளாவைத்து, இவ்வுரையாசிரியனைத் தெரிவித்துக்கொள்கிறான்.

---

## ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமி அய்யரவர்கள் அபிப்பிராயம்.

## கைவல்ய நவநீதம்.

ஆத்மானுஸந்தானத்திற்கு மிகவும் அனுகூலமாகவும், ஆத்மானுபூதியை நன்கு வெளியிடக்கூடியதாகவும், இருக்கும் கிரந்தங்களில் **கைவல்யநவநீதம்** என்ற கிரந்தம் மிக்க சிறந்ததென்பது யாவரும் அறிவர்.

அந்நூலுக்கு, ஓர் மஹானால் தேவபாஷையில் தர்ஜமாசெய்திருக்கிற விஷயம் சிலர்களுக்கு தெரியாமலிருக்கலாம்.

இவ்விரண்டு நூல்களுமே அப்பியாஸிகளுக்கு மிகவும் பிரயோஜனமாயிருக்கக் கூடியதுபற்றி, அவைகளுக்கு தாத்பர்யப்பிரகாசமாய் வாஸிஷ்டாதி பலவித புராணவசனங்களையும், சுருதி ஸ்மிருதி வாக்கியங்களையும், எடுத்துச் சொல்லி ஓர் வியாக்கியானம் அமைக்கப்பட்டிருக்கிறது.

இவ்வியாக்கியானம் உள்பட ஷ்டி கிரந்தங்களையும் அச்சிட்டுவெளியிட்டால், லோகோபகாரமாயாகுமென்ற ஓரே நோக்கத்துடன் அவ்வித பிரயத்னம் செய்யப்படுகிறது.

இவ்விஷயத்தில் கொஞ்சம் உதவினாலும் ஞானதானமென்ற மேலான தான புலன் கிடைக்குமென்பதில் ஸந்தேகமில்லை.

இப்புஸ்தகம் கூடிய சீக்கிரம் அச்சாகி வெளியாகும்படி ஈசுவரன் அனுக்கிரஹம் செய்வாராக.

**R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்,**
அட்வோகேட்,
வீரராகவபுரம், திருநெல்வேலி.

20–3–32.]

## பிரம்மஸ்ரீ ராமானந்த ஸரஸ்வதீ சுவாமிகளவர்கள் அபிப்பிராயம்.

பிரம்மஸ்ரீ தாண்டவர் இயற்றியதும் இத்திராவிட (தமிழ்) நாடெங்கும் விசேஷ பிரஸித்தியைப் பெற்றிருப்பதுமான "கைவல்யநவநீதம்" என்ற அரிய தத்துவநூலுக்கு கரூருக்கடுத்த திருமாநிலையூர் அக்கிரஹாரவாஸியான பிரம்மஸ்ரீ கோவிந்தய்யர் வெகுகாலம் ஈடுபட்டிருந்து, விசேஷ உழைப்புடன் அதன் அந்தரங்க தாத்பர்யங்களை நன்கு பரிசோதித்துத் தெரிந்துகொண்டு, இதர முமுக்ஷுக்களின் ஹிதத்தை யுத்தேசித்து ஷெ நூலுக்கு ஸப்பிரமாணமாக "தாத்பர்யதீபிகை" என்ற பெயருடன் ஒரு தமிழ் வியாக்யானத்தை எழுதிவைத்திருப்பதில், அதன் அனேக பாகங்களை நான் பலகாலங்களில் அவர்முகமாகவே வாசிக்கக்கேட்க நேர்ந்தது. சாஸ்திரமார்க்கத்தை விட்டு விலகாமலும் ஸ்வல்ப ஸம்ஸ்கிருதபாஷா பரிசயமுள்ள ஸாமான்ய முமுக்ஷுக்கள் கூட லகுவாய் அறிந்துகொள்ளக்கூடிய விதத்திலும் ஷெ வியாக்கியானம் எளிய நடையில் எழுதப்பட்டிருக்கின்றது. ஸம்ஸ்கிருதத்தைக் கொஞ்சங்கூடத் தெரிந்துகொள்ளாதவர்களுக்கு இவ்வியாக்கியானத்தை மனதில் நன்றாக வாங்கிக் கொள்வது சிரமப்படுமென்று சொல்லப்படக்கூடியதானாலும், இவர்களும் ஸாதாரண ஸம்ஸ்கிருத வியுத்பத்தியுள்ளவர்களின் ஸஹாயத்தின்பேரில் இதை செம்மையாய்ப் படித்துத்தெரிந்துகொண்டுவிடலாம். வியாக்கியாதாவின் முகவுரையிலிருந்து மூல கிரந்தகர்த்தா பிராம்மணரென்று வியக்தமாய்த் தெரியவருவதினால், ஷெ வியாக்கியானத்தை அவர் எழுதியதும் உசிதமென்றே துலங்கும். இந்நாட்டில் சிலர்கள் "தாண்டவராயசுவாமிகள்" என்ற பெயரால் பிரஸித்தி பெற்றிருந்த கிரந்தகர்த்தா சூத்திரராகவே யிருந்திருக்கவேண்டுமென்று சொல்லி வந்திருக்கின்றார்கள். இது தவறென்பதை ஷெ முகவுரை நன்கு துலக்குகின்றது. மூலகிரந்தத்தில் "தாண்டவர்" என்ற பெயர் மாத்திரம் காணப்படுவதால், வியாக்யாதா அப்பெயரை மாத்திரம் கண்டெழுதியிருக்கின்றார். "தாண்டவராய சுவாமிகள்" என்ற பெயரே உண்மையாயிருக்குமானாலும், அது அவருடைய பிராம்மணத் தன்மைக்கு விரோதமாகமாட்டாது. "தாண்டவர்" என்பதுதான் அவருக்குப் பெற்றோரால் வைக்கப்பட்டபெயரென்று அவராலேயே கிரந்தத்தில் குறிப்பி

டப்பட்டிருக்கின்றது. அவர் ஸன்யாஸியாயிருந்தால், பெற்றோர் வைத்த பெயர் நீங்கிப்போய் வேறு யோகப்பட்டப் பெயரே ஏற்பட்டிருக்குமாகையால் அவர் ஸன்யாஸியல்லவென்றே வியக்தப்பட்டிருக்கின்றது. ஆதலால் "ஸ்வாமி" என்ற பெயர் அவருடைய பிராம்மணத்தன்மையை, அல்லது விசேஷயோக்கியதையை, அல்லது இரண்டையும் முன்னிட்டுண்டான மரியாதைப்பெயராக இருந்திருக்கவேண்டுமென்பதாகவே சொல்லவேண்டும். "ராய" பட்டம் ஏற்பட்டதற்குப் பல காரணங்களிருந்திருக்கலாம். இத்தென்தேசத்திய ஸ்மார்த்த பிராம்மணர்களுக்குள்ளாகச் சிலர்களுக்கு ஸுப்பராய சாஸ்திரி அல்லது அய்யர். வெங்கட்ராய அய்யர் அல்லது சாஸ்திரி முதலான பெயர்கள் இருப்பதுபோல், "**தாண்டவராய சாஸ்திரி** அல்லது **அய்யர்**" என்று பெயர் கிரந்தகர்த்தாவுக்கு இருந்திருக்கக்கூடும். தவிரவும் கிரந்தகர்த்தாவின் காலத்தில் தஞ்சாவூர் ஸமஸ்தானத்தில் மஹாராஷ்டிர ராஜாங்க ஆளுகை பலப்பட்டிருந்ததாலும், அக்காலத்தில் ஷை ஸமஸ்தானத்திலுள்ள பிரமுகர்களுக்கும் மற்றும் அனேகர்களுக்கும் "ராயர்" பட்டமே பெரும்பாலும் வழங்கிவந்தபடியாலும், ஷை ஸமஸ்தானத்தைச் சேர்ந்த நன்னிலத்திலிருந்த கிரந்தகர்த்தாவுக்கும் "**தாண்டவராயர்**" என்றே பெயர் பிரஸித்தப்பட்டிருக்கலாம். அன்றியும், "நடராஜா" என்ற பெயரைப்போல் "**தாண்டவராஜா**" என்றே கிரந்தகர்த்தாவுக்குப்பெயர் வாய்ந்திருந்து, ராஜ பட்டம் நாளடைவில் ராய பட்டமாகத் திரிந்திருக்கவும் கூடும். ஆகையால் "**தாண்டவராயஸ்வாமிகள்**" என்ற பெயரும் அவருடைய பிராம்மண்யத்திற்கு அனுகூலமே தவிர வேறல்ல. மேலும், கிரந்தகர்த்தாவின் குடும்பத்திற்கு ஸம்பந்தப்பட்ட சில பிராம்மணர்கள் இப்பவும் நன்னிலத்தில் இருந்துவருவதாகவும் தெரியவருகிறது. வியாக்கியாதா சுருக்கமாய் விவரித்திருக்கிற பிரகாரம் கிரந்தகர்த்தா செய்திருக்கின்ற **விசேஷ பதப்பிரயோகங்கள்**, அவர் சொல்லியிருக்கின்ற **உதாஹரணங்கள்**, அவர் குறிப்பிட்டிருக்கின்ற **தர்மாசரணை, வழிபாடுகள்**, அவர் வெளியிட்டிருக்கின்ற வேதசாஸ்திர, ஜ்ஞான, ஆராய்ச்சிகள், முதலானவை எல்லாம் அவர் **பிராம்மணர்தான்** என்பதையே தெரிவிக்கின்றன. பிராம்மணராகவேயிருந்தும் தமிழில் பிரகிருத நூலை எழுதியதற்குக் காரணம், அவருடைய குருவின் ஆஜ்ஞைதானென்று அவராலேயே வெளிப்ப

டுத்தப்பட்டுமிருக்கின்றது. அந்நூலியற்றிய பிராம்மணருக்கு தமிழ் பாஷையிலும் தேர்ச்சியிருந்திருக்கக் கூடுமோவென்று சங்கைப்படவேண்டாம். பிராம்மணர்கள் எக்காலத்திலும் தமிழிலும் பெரும் வித்வான்களாகவே யிருந்ததாகவும் வெளியாகின்றது. இக்காலத்திலும் உயர்ந்த தமிழ் வித்வானாக இருந்துவருகின்ற மஹாமஹோபாத்தியாயர் பிரம்மஸ்ரீ ஸ்வாமிநாதய்யர் பிராம்மணரல்லவா. தவிரவும், கிரந்தகர்த்தா பிராம்மணாராகவே இருந்தாலொழிய அவருடைய கிரந்தத்தைப் பிரமாணமாகக் கொண்டு இரண்டு **பிராம்மணஸம்ஸ்கிருத வித்வான்கள்** தனித்தனியே வெவ்வேறு இடங்களிலும் காலங்களிலும் அதை ஸம்ஸ்கிருதத்தில் மொழிபெயர்த்துக் கவனம் செய்து எழுதியிருக்கவும் மாட்டார்கள். எவ்விதம் **விதுரர்** எவ்வளவு உண்மையான ஜ்ஞானியாகவே யிருந்தபோதிலும், தான் பிறவியில் சூத்திரராகையால் சாஸ்திரப்படி தன்னுடைய வாக்கியத்திற்குப் பிராமாண்யம் கிடையாதென்பதைத் தெரிந்துகொண்டவராதலால், பிரம்மவித்யாவிஷயமாகத் தான் ஒன்றும் சொல்லக்கூடாதென்று சொல்லி, பிரம்மவித்தையின் உபதேசத்தைச் செய்யும்பொருட்டு **ஸ்ரீஸ்னத்ஸுஜாதமஹரிஷியை** தியானத்தினால் தருவித்து அவர்மூலமாக **திருதராஷ்டிரருக்கு** உபதேசத்தைச் செய்துவைத்தாரோ, அவ்விதம் பிரகிருத கிரந்தகர்த்தாவும் சூத்திரராகவும் உண்மையான ஜ்ஞானியாகவும் இருந்திருப்பாரேயானால், அவர், தான் உச்சரிக்கக் கூடாத வேத மஹாவாக்கியங்களைக் கண்டு ஜனங்களின் உபதேசத்தைக் கருதி, அதாவது லோகோபகாரத்தின் பொருட்டென்று சொல்லிக்கொண்டு பிரகிருத கிரந்தத்தை எழுதியிருக்கவேமாட்டார். ஆகையால் கிரந்தகர்த்தாவை சாஸ்திரஜ்ஞரென்றும் ஜ்ஞானி என்றும் ஒப்புக்கொள்பவர்கள், அவரை **பிராம்மண**ரென்றும் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். இந்தப்படி பல காரணங்களினால் கிரந்தகர்த்தா பிராம்மணரென்றே ஏற்படுவதால், அவருடைய கிரந்தத்திற்கு பிரம்மஸ்ரீ **கோவிந்தய்யர்** வியாக்கியானம் செய்திருப்பதும் கிரமமும் லோகோபகாரார்த்தமுமேயாகும்.

இவ்வியாக்கியானத்துடன் கூடிய **ஷை** அரிய நூல் சீக்கிரத்தில் அச்சாகி வெளியாவதற்குள்ள ஆனுகூல்யங்களைச் செய்துவைக்க ஒவ்வொரு ஆர்ய-ஆஸ்திகரும் கட்டுப்பட்டிருக்கிறரென்பது வியக்தமாகையால், இவ்விஷயத்தில் பிரம்மஸ்ரீ **கோவிந்தய்யர்**

திருந்த முயற்சிகளைச் செய்தால் அவை நன்கு பலவத்தாகுமென் பது உறுதியே.

ஆங்கீரஸஹூ ஆனிமீ 2வ. தேவகிரி. } ராமானந்தஸரஸ்வதி.

---

## பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளவர்கள் அபிப்பிராயம்.

ஆஸ்திகர்காள் !

இக்கலியுகத்தின்கண் யர்வரும் ஒவ்வொரு விதமான துக்கத்தையடைந்து வைதிக தர்மத்தை அனுஷ்டிக்க முடியாமல் சார்வாக மதம்போல் தேகத்தையே ஆத்மாவாக எண்ணி சகல மான பிருவிருத்தியிலும் அகங்கார மமகாரங்களையே செலுத்தி ஏற்கனவே இருக்கும் துக்கத்தை கோடிமடங்காக விருத்திசெய் துகொண்டு துக்கத்தினின்றும் விடுபட வேறுவழி தெரியாது இருக்குமளவில், அனேகம் பெரியோர்கள் அன்பினால் துக்கிகள் கடைத்தேறுமாறு ஸதுபதேசங்களைச் செய்யக்கூடிய உத்தம கிரந்தங்களை வெளியிட்டிருப்பதில், (அந்தந்த அதிகாரிக்குத் தக்கவாறு).

**தாண்டவர்** என்ற நாமம் பூண்ட ஒரு பெரியார், **கைவல்ய நவநீதம்** என்ற கிரந்தத்தை தமிழ் பாஷையில் பாடலாக எழுதி யிருப்பதை யாவரும் அறிந்த விஷயம். தற்காலத்தில் அந்நூ லின் ஸாராம்சத்தை அறிந்து கொள்வதும் சிற்சில அதிகாரிகளு க்கு முடியாமலிருப்பதை உத்தேசித்து, அவர்களின் அனுக்கிர கத்தையும் கருதி பிரம்மஸ்ரீ திருமாநிலையூர் **கோவிந்தய்யர்** அவர் கள், மேற்கூறிய நூலிற்கு **தாத்பர்யதீபிகை** என்னும் ஒரு வியாக் கியானத்தை எளிய தமிழ் நடையில் கம்பீரமாயுள்ள **உபநிஷத்து** க்களின் தாத்பர்யங்களையும் ஸஹாயமாக வைத்துக்கொண்டு விவ ரித்துள்ளார். ஆஸ்திகசிகாமணிகள் யாவரும் இந்நூலின் அபிப் பிராயத்தை இவ்வியாக்கியானமூலமாக அறிந்து கூடியவறை பர மாத்ம தத்வத்தை அனுஸந்தானம் செய்துகொண்டு துக்கத்தி

னின்றும் அடியோடு விடுபட்டு பரமானந்தபரிதர்களாய் ஆகவே ணுமாய் ஸர்வாந்தர்யாமியான் பரமாத்மாவைப் பிரார்த்திக்கிறேன்.

ஆங்கீரஸ ௵ }
ஆனி ௴ 8-உ }

இப்படிக்கு,
**S. V. சுப்பிரமணிய சாஸ்திரிகள்,**
சிருகமணி.

---

## பிரம்மஸ்ரீ யஜ்ஞஸ்வாமி சாஸ்திரிகளவர்கள் அபிப்பிராயம்.

ஸ்ரீ ஶிவஶரணம் ॥

தாத்பர்யதீபிகாஸஹித: கைவல்யநவநீதக்ரந்த: ॥

கைவல்யநவநீதம் என்கிற கிரந்தமானது திராவிட பாஷையில் பூர்ணபாண்டித்யமுள்ளவரும் வேதாந்த ஸித்தாந்தம் நன்கறிந்தவரும் ஆத்மகுணம் பொருந்திய மஹானுபாவன் தாண்டவராய கவியால் இயற்றப்பட்டதென்பது யாவருமறிந்தவிஷயம். ௸ கிரந்தத்திற்கு ஸமானார்த்தமாக சங்கு என்ற பெயருள்ள ஓர் ஸம்ஸ்கிருத மஹாகவி ௨௲௩ பத்தியங்கள் ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றியிருக்கிறார். இந்த இரண்டு கிரந்தங்களுக்கும் வியாக்கியானங்களில்லாமலிருக்கின்றன. தமிழிலும் ஸம்ஸ்கிருதத்திலும் நல்ல பயிர்ச்சியில்லாமலிருப்பவர்களுக்கு உபயோகப்படும்படிக்கு ஸரஸமான ஓர் பதவுரையானது **தாத்பர்யதீபிகை** என்கிற பெயருடன் கர்ப்பபுரி வாஸியான மகா-௱-௱ஸ்ரீ **கோவிந்தய்யரால்** எழுதப்பட்டிருக்கிறது. ௸ உரையானது சிற்சில இடங்களில் என்னால் பார்க்கப்பட்டது. ௸ இரண்டு மூலங்களோடு கூடின இந்த உரையானது வேதாந்தஸித்தாந்தத்தை ஸரஸமாக அறிந்துகொள்ள விருப்பமுள்ளவர்களுக்கு குதூஹலத்தை உண்டுபண்ணுமென்று நினைக்கிறேன்.

யஜ்ஞஸ்வாமி சாஸ்திரி,
டபீர் புதுத்தெரு,
கும்பகோணம்.

23—8—32.

---

## பிரம்மஸ்ரீ க. ச. கிருஷ்ணசாஸ்திரிகளவர்கள் அபிப்பிராயம்.

ஸ்ரீ மஹாஹவாஸ்ரீ கேஷத்ருவாஸி கோவிந்த அய்யாவவர்கள் திராவிடத்திலும் ஸம்ஸ்கிருதத்திலும் ஏர்பட்டிருக்கிற **கைவல்ய நவநீத** மென்ற நூலுக்குப் பொருத்தமாக உபநிஷத்து முதலான வாக்கியப் பிரமாணத்துடன் **தாத்பர்யதீபிகை** என்ற ஒரு தமிழ் வியாக்கியானம் எழுதியிருக்கிறார்கள்.

அதை சிலசிலவிடங்களில் வாசித்துக்கேட்டதில் கூடியவரை சாஸ்திரத்திற்கு ஒத்து இருக்கிறது. இந்த வியாக்கியானம் அந்த இரண்டு மூலத்தினர்த்தத்தை தெரிந்துகொள்ள விருப்பமுள்ளவர்களுக்கு சரியான சாதனமாகுமென்று நினைக்கிறேன்.

க. ச. கிருஷ்ணசாஸ்திரி,
5—9—1932. மஹாமஹோபாத்தியாயர்,
பிரின்ஸ்பால், ஸம்ஸ்கிருத காலேஜ்,
**மைலாப்பூர், சென்னை.**

---

## பிரம்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகளவர்கள் அபிப்பிராயம்.

72, பெரியதெரு, திருவல்லிக்கேணி,
சென்னை. 5—9—1932.

பிரம்மவித்வரிஷ்டர்களான **தாண்டவராயசுவாமிகளவர்கள்** தமது ஆத்மானந்தானுபவத்தை தமிழ் பாக்கள் வாயிலாகத் தமிழ் மக்களுய்யுமாறு **கைவல்யநவநீத** மென்ற பெயருடன் வெளியிட்டிருப்பது யாவருமறிந்ததே.

புனிதமான அந்தக் **கைவல்யநவநீதத்தி** லமைந்துள்ள ஆழ்ந்த கருத்துக்கள் யாவையும் வடமொழி தென்மொழி இரண்டிலும் வல்லுணர்வினரான **சங்குகவி** என்ற மஹான் வடமொழியில்

சுலோக ரூபமாக அதே பெயருடன் வெளியிட்டிருப்பதாகமட்டும் வெகு நாட்களாக நாம் கேட்டு வந்தோமேயல்லாது அவ்வுத்தம கிரந்தத்தை இப்பொழுதுதான் நேரில் பார்க்கும் பாக்கியம் பெற்றோம்.

இவ்விரு நூல்களிலும் பதிந்து கிடக்கும் அருமை பெருமை தங்கிய கருத்துக்கள் யாவையும் நன்கு விளக்கி கருவூருக்கடுத்த திருமாங்கிலையூர் வாஸிகளான ஸ்ரீமான் **கோவிந்தய்யரவர்கள்** தென்மொழியில் **தாத்பர்யதீபிகை** என்ற பெயருடன் எழுதிய உரையை அனேகமாகப் படிக்கக்கேட்டதில் இவ்வுரை அவ்விரு நூல்களின் கருத்துக்களை நன்கு விளக்கக்கூடியதாகவே இருக்கின்றதென எண்ணினோம்.

சுருங்கச் சொல்லின் அத்வைதவேதாந்த ஸித்தாந்தத்தை எளிதிலறிந்துகொள்ள ஆவலுள்ளவர்க்கு இவ்வுரை பேருபகாரமாகவேயிருக்குமென்பதில் யாதுமையமில்லையென்பது எமதபிப்பிராயமாகும்.

ஆகவே "முனிவருமன்னனு முன்னுவ பொன்னுன் முடியும்" என்றபடி இப்பெருந்தொண்டுக்குத் தக்க பொருளுதவி வேண்டுமாகலின் அத்வைத வித்யாபிமானித் தமிழுலகம் ஸ்ரீமான் **கோவிந்தய்யரவர்களுக்குத்** தக்க பொருளுதவிசெய்து ஆதரிக்குமென நம்பி அவ்விதமே ஆதரிக்கும்படி பிரார்த்திக்கிறோம்.

இங்ஙனம்,
ஆர்யமதஸம்வர்த்தனீ பத்திராதிபர்,
**கடலங்குடி, நடேச சாஸ்திரிகள்.**

௨

# கைவல்ய நவநீதம்.

௧. 𑌶𑍍𑌰𑍀𑌗𑍁𑌰𑍁𑌚𑌰𑌣𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌂
𑌵𑌨𑍍𑌦𑍇𑌽𑌹𑌂 𑌮𑌥𑌿𑌤𑌦𑍁𑌸𑍍𑌸𑌹𑌦𑍍𑌵𑌨𑍍𑌦𑍍𑌵𑌮𑍍 ।
𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿𑌗𑍍𑌰𑌹𑍋𑌪𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌂
𑌪𑌾𑌂𑌸𑍁𑌮𑌯𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌭𑌸𑌿𑌤𑌮𑌾𑌤𑌨𑍁𑌤𑍇 ॥

श्रीगुरुचरणद्वन्द्वं वन्देऽहं मथितदुस्सहद्वन्द्वम् ।
भ्रान्तिग्रहोपशान्ति पांसुमयं यस्य भसितमातनुते ॥

௧. கடைதல் செய்யப்பட்டிருக்கிற (நிவிருத்திக்கப்பட்டிருக்கிற) ஸகிக்க முடியாத தொந்தத்தையுடைய ஸ்ரீ குருவின் உபயபாதங்களை, (இணையடிகளை) நான் நமஸ்கரிக்கின்றேன். எந்த சரணதொந்தத்தின் தூள்மய நீறானது பிராந்திரூபபேயின் 'துவித' உபசமனத்தைச்செய்கிறதோ, அத்தகைய.

௨. 𑌏𑌕𑌾𑌨𑍍𑌤𑌸𑌨𑍍𑌨𑌿𑌹𑌿𑌤𑌮𑍀𑌦𑍃𑌶𑌮𑌾𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂
𑌲𑍋𑌕𑌾 𑌵𑌿𑌮𑍂𑌢𑌮𑌤𑌯𑍋 𑌬𑌤 𑌨𑌾𑌦𑍍𑌰𑌿𑌯𑌨𑍍𑌤𑍇 ।
𑌆𑌕𑌾𑌶𑌗𑍋𑌚𑌰𑌮𑌶𑍇𑌷𑌜𑌗𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌂
𑌘𑍂𑌕𑌾 𑌨 𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑌮𑍁𑌦𑍀𑌕𑍍𑌷𑌿𑌤𑍁𑌮𑍁𑌤𑍍𑌸𑌹𑌨𑍍𑌤𑍇 ॥

२. एकान्तसन्निहितमीदृशमात्मतत्त्वं
लोका विमूढमतयो बत नाद्रियन्ते ।
आकाशगोचर मशेषजगत्प्रकाशं
घूका न भास्करमुदीक्षितुमुत्सहन्ते ॥

௨. ஏகாந்தத்திலிருக்கிற 'வைக்கப்பட்டு' இத்தகைய ஆத்மதத்வத்தை விசேட மூடபுத்தியுள்ள ஜனங்கள் ஆதரிக்கிறார்

களில்லை. ஆ! கஷ்டம். ஆகாயத்தில் காணப்படுகிற உலகமனைத்தும் பிரகாசிப்பிக்கிற சூரியனை நிமிர்ந்து பார்க்க கோட்டான்கள் சகிக்கிறதில்லை போன்று.

ங. 𑌯𑌦𑍀𑌯𑌵𑌾𑌕𑍍𑌸𑍂𑌰𑍍𑌯𑌰𑍁𑌚𑌿𑌪𑍍𑌰𑌣𑌾𑌶𑌿𑌤𑍋
𑌹𑍃𑌦𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑍋 𑌨𑌮𑌤𑌾𑌮𑌶𑍇𑌷𑌤𑌃 ।
𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌶𑍍𑌶𑌿𑌷𑍍𑌯𑌹𑌿𑌤𑍇 𑌸𑌦𑌾 𑌰𑌤𑌾𑌨𑍍
𑌨𑌮𑌾𑌮𑌿 𑌤𑌾𑌨𑍍 𑌶𑌙𑍍𑌕𑌰𑌪𑍂𑌜𑍍𑌯𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌨𑍍 ॥

३. यदीयवाक्सूर्यरुचिप्रणाशितो हृदन्धकारो नमतामशेषतः ।
महात्मनश्शिष्यहिते सदा रतान् नमामि तान् शङ्करपूज्यदेशिकान् ॥

௩. நமஸ்காரம் பண்ணுகிறவர்களுடைய ஹ்ருதயத்துள்ளிருட்டானது எவருடைய வாக்காகிற சூரிய கிரணங்களால் சேடிக்காமல் நன்கு நாசம் பண்ணப்பட்டதாவாகிறதோ, எப்போதும் சீடர்களுடைய ஹிதத்திலேயே ரதியுடைய மகாத்மாவாகிய அத்தகைய சங்கரபூஜ்ய தேசிகாளை நமஸ்காரம் செய்கிறேன்.

ச. 𑌅𑌮𑍃𑌤𑌮𑌤𑍁𑌲𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌨𑌨𑍍𑌦𑌸𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂
𑌵𑌿𑌦𑌿𑌤𑌸𑌕𑌲𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌤𑌾𑌤𑍍𑌪𑌰𑍍𑌯𑌨𑌿𑌷𑍍𑌠𑌮𑍍 ।
𑌮𑍃𑌦𑌿𑌤𑌸𑌕𑌲𑌦𑍋𑌷𑌂 𑌮𑍋𑌕𑍍𑌷𑌕𑌾𑌮𑍈𑌸𑍍𑌸𑍁𑌸𑍇𑌵𑍍𑌯𑌂
𑌗𑍁𑌰𑍁𑌵𑌰𑌮𑌹𑌮𑍀𑌡𑍇 𑌕𑍃𑌷𑍍𑌣𑌸𑌂𑌜𑍍𑌞𑌂 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍍 ॥

४. अमृतमतुलनित्यानन्दसान्द्रस्वरूपं
विदितसकलवेदान्तार्थतात्पर्यनिष्ठम् ।
मृदितसकलदोषं मोक्षकामैस्सुसेव्यं
गुरुवरमहमीडे कृष्णसंज्ञं यतीन्द्रम् ॥

ச. நாசரகித, ஸமானரகித, நித்யானந்தகனஸ்வரூப, அறியப்பட்டிருக்கிற ஸமஸ்த வேதாந்தார்த்தங்களுக்கும் எதில் தாத்பர்யமோ அதில் ஸ்திதியுடைய, மர்த்தனம் பண்ணப்பட்டிருக்கிற சகல தோஷத்தையுடைய, (உபாதித்ரயத்தையுடைய) முமுக்ஷுக்களால் நன்கு ஸேவிக்கப்படுகிற, யதிகளுக்கெல்லாம் இந்திரன் போன்ற, கிருஷ்ணநாமமுடைய குரு சிரேஷ்டரை நான் வணங்குகின்றேன்.

## பாயிரம்.

### மூலம் க.

பொன்னிலமாதராசைபொருந்தினர் பொருந்தாருள்ளந், தன்னிலந்தரத்திற் சீவசாக்ஷிமாத்திரமாய் நிற்கும், என்னிலங்களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா, நன்னிலமருவு மேகநாயகன் பதங்கள் போற்றி.

𑌸𑍍𑌵𑌰𑍍𑌣𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌵𑌧𑍂𑌸𑍍𑌪𑍃𑌹𑌾𑌸𑌹𑌿𑌤𑌹𑍃𑌤𑍍𑌤𑌨𑍍𑌮𑍁𑌕𑍍𑌤𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌨𑌾
𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌵𑍍𑌯𑍋𑌮𑌵𑌿𑌕𑌾𑌸𑌿𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌹𑌸𑍇 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌪𑌰𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑌃 ।
𑌯𑌦𑍍𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌗𑌿𑌰𑍋 𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌨𑍁𑌦𑌿𑌨𑌂 𑌸𑌪𑍍𑌤𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌾
𑌯𑌾 𑌭𑍂𑌮𑌿𑌶𑍍𑌚 𑌤𑌤𑍋 𑌵𑌿𑌦𑍂𑌰𑌮𑌮𑌲𑌂 𑌤𑍁𑌰𑍍𑌯𑌂 𑌸𑌦𑍇𑌕𑌂 𑌶𑌿𑌵𑌮𑍍 ॥

**स्वर्णक्षेत्रवधूस्पृहासहितहृत्तन्मुक्तचित्तात्मना-**
**मन्तर्व्योमविकासिनित्यमहसे तस्मै परस्मै नमः ।**
**यद्वेदान्तगिरोवदन्त्यनुदिनं सप्तक्ष्माणां परा**
**या भूमिश्च ततो विदूरममलं तुर्यं सदेकं शिवम् ॥**

### அவதாரிகை.

இங்கொரு கவி அறியப்பட்டிருக்கிற பிரம்மாத்மதத்வர் தாம் கிருதார்த்தர் எனினும் சுவானுபவம்போன்றன்னியர்களும் (முமுக்ஷுக்களும்) மோக்ஷஸாதன ஆத்மதத்வமறிதற்பொருட்டு வேதாந்தஸார ஸ்பஷ்ட † 𑌕𑌥𑌨 **कथन** ரூபம் கிஞ்சித் பிரகரணமாரமபிக்கிறவராய் அதற்கு ‡ 𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍂𑌹 **निष्प्रत्यूह** பரிபூரணத்தி ஸித்திநிமித்தமும் § 𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑌾𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑍃𑌤𑍍𑌯𑌙𑍍𑌗𑌭𑍂𑌤𑌵𑌿𑌷𑌯𑌾𑌦𑌿𑌸𑌮𑍍𑌯𑌕𑍍 **प्रेक्षावत्प्रवृत्यङ्गभूतविषयादि सम्यक्** தர்சனத்தின் பொருட்டும், அதன் அந்தர்கத 'பிரஜ்ஞானம் பிரம்ம' என்னும் இலக்கண மகாவாக்யார்த்த அத்துவிதசொரூபமாம் * 𑌸𑍍𑌵𑌕𑍃𑌤𑌂 𑌮𑌙𑍍𑌗𑌲𑌂 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌤𑍋 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 । **स्वकृतं मङ्गलं ग्रन्थतो निबध्नाति ।**

---

† சொல்லுதல். ‡ நிர்விக்ன. § அதிகாரியின் பிரவிருத்திக்கு அங்கபூதமாகிய விஷயாதி நன்கு.

* தாம் செய் மங்கலத்தை கிரந்தரூபமா வெழுதுகிறார்.

வாச்சிய லிலக்கியமாவிளங்குவ்து யாது? அப்பதத்து விதநிஷ்டமா? அது அங்ஙனம் அங்ஙனம் தோன்றி நிற்கும் என சுவானுபவமுகத்தில் பொன்னென.

## பொழிப்புரை.

பொன் மண் பெண் ஆசையுள்ள அஜ்ஞானிகள், ஆசையில்லாத ஞானிகள் ஆகிய இவ்விருதிரத்தினருடைய ஹ்ருதாகாசத்தில் தாக்கற்ற ஆகாசம் போன்று புத்திக்கு சாக்ஷிமயமாய் நான் என விளங்குகிறதாய்க் கொண்டு நிலைபெற்றிருக்கும், எத்தகை ஸ்தானங்களிலும் மேலாய ஞானபூமி ஏழினுள் முடிவாகிய துரிய நிலத்தைப் பொருந்தும், ஏக ஈசனது இணையடிகளை வணங்குவாம்.

## பதப்பொருள்.

பொன் மண் பெண் எனவே ஏடணாத்திரயம் புத்ரேடணை மாதரில் அவரவுக்கு இயைதலின் மண்ணையும்.

சாஸ்திரங்களில் க்ஷேத்திரத்தை வித்தத்திலும், இந்நூலாசிரியர் புத்திரனை மாதரிலும் அந்தர்பாவப்படுத்தி கூறியிருத்தலின் விரோதம் ஒன்றும் இன்றென.

பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன் என்றார் தாயுமானவரும்.

முன்னயவிரண்டும் மாதர்கொண்டு இல்லறத்துக்கியைய சாதனங்களாதலின் ஸ்ரீசக்தி பூசக்தி கொண்டன்றோ திருமால் பாலனக்கிரியை புரிகிறார். கோபாலன் என்ன ஆதலின்.

எனவே பந்தத்துக்கு முதற்காரணமென மாதர் அத்தகையரியல்பு சற்று விவரிக்கப்பட்டது.

ஆகவே எந்த சைதன்யம் சுரோத்ராதி இந்திரியவழித்தா சப்தாதிவிஷயங்களை அறிகிறதோ என இதனால்.

ஆசை = அவா மூலமிதற்குராகம், இதற்கோ ரஸம். எனவே ரஞ்ஜனரூபம் சூக்ஷ்மம். இதன் ஸ்திதி ஹ்ருதயக்கிரந்தியில். எனவே கிரந்திபேதனமின்றி ஆத்யந்திக நிவிருத்தியுறாவென ராகாதி. கிரந்திபேதனமோ பராவரதர்சனத்தினால்.

